Registered No. M. 2330.



# சித்தாந்தம்

"ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானதரு வாணியை உள்நாடு"



| மலர் எ | பவ ஆண்டு மார்கழித் திங்கள் 1934ஆ டிசம்பர்மீ | இதழ் கஉ |
|---|---|---|



## திருவெம்பாவை ஓதும் காலம்

[பத்திராசிரியர்]

திருவெம்பாவை திருவாசகத்துள் இருபது பாடல்களடங்கிய ஒரு பனுவலென்பது சைவ நன்மக்கள் அறிந்ததொன்று. இப்பாடல்கள் உருக்கமும் இனிமையும் அழகும் பொருட்செறிவும் உடையன. இப்பாடல்களைச் சாதாரணமாக மார்க்கழி மாதத்தில் ஓதுவது வழக்கம். பல சிவாலயங்களில் மார்க்கழித் திருவாதிரையில் நிகழும் ஆருத்ராதரிசன உத்ஸவத்துக்குப் பத்துநாள் முன்னதாக நாடோறும் காலையில் மாணிக்கவாசக சுவாமிகட்கு வீதி உத்ஸவம் நடத்தி எட்டுத் திக்குகளிலும் திருவெம்பாவைப் பாடல்களை ஓதுவது வழக்கமாயிருக்கிறது.

திருவெம்பாவை ஓதுங்காலத்தைப்பற்றி நடைமுறையில் பலவித்தியாசங்கள் இருக்கின்றன. சிலர் எக்காலத்திலும் எம்மாதத்திலும் ஓதலாம் என்கின்றனர்; ஓதியும் வருகின்றனர். சிலர் மார்கழிமாதம் முழுமையும் ஓதலாம் என்கின்றனர்.

சிலர் மார்கழித் திருவாதிரையன்றும் அதற்குப் பத்துநாள் முன்னுமாகமொத்தம் பதினொருநாட்களில்தான் ஓதலாமென் கின்றனர். இப்பதினொரு நாட்கள் ஊருக்குஊர் மாறுபட்டுள் ளன. கடற்கரையோரமாயுள்ள தலங்களில் ஆருத்ராதரிசனம் மார்கழித்திருவாதிரையைப் பற்றாது மார்கழிப்பௌர்ணிமை யைப்பற்றியேநடைபெறுகின்றது. உள்நாட்டுத்தலங்களில்நட ராஜமூர்த்திக்கு அபிஷேகம் நடைபெறும் காலத்தில் திருவா திரை யிருத்தல்வேண்டுமென்ற விதியையொட்டி ஆருத்ரா தரிசனம் குறிக்கப்படுகின்றது. திருவாலங்காட்டில் இரவு பன்னிரண்டு மணிக்கு அபிஷேகம் நடைபெறுதலால் அவ் வேளையில் திருவாதிரை யிருத்தல்வேண்டும். அடுத்தநாள் காலையில் தரிசனம் நடைபெறுங்காலையில் திருவாதிரை இருத் தல் வேண்டுமென்பதில்லை. சிதம்பரத்தில் விடியற்காலையில் 5 மணிமுதல் 7 மணிவரையில் திருவாதிரை இருத்தல் வேண்டும். பிறகு தரிசன காலத்தில் அந்த நக்ஷத்திரம் தேவையில்லை. உதாரணமாக 'இன்று காலை 4 மணிமுதல் நாளை காலை 4 மணிவரை திருவாதிரை நக்ஷத்திரம் இருப்ப தானல்,இன்று சிதம்பரத்திலும்,நாளை திருவாலங்காட்டிலும் ஆருத்ரா தரிசனம் நடைபெறும். திருவாதிரை, பௌர் ணிமை, மார்க்கழிமாதத்தில் முதலில் வருவதானல் கார்த் திகை மாதத்திலும் சில நாட்கள் (இவ்வாண்டில் வருவது போல) திருவெம்பாவை ஓதும் நாட்களாய்விடுகின்றன. எனவே, திருவெம்பாவை ஓதும் பதினொரு நாட்கள் இடத் துக்கு இடம் மாறுபட்டு வருகின்றன.

பல தலங்களில் இப்பதினொரு நாட்களில் திருவெம் பாவையைத் தவிர வேறு எப்பாடல்களும் பாடுதல் கூடாது என்ற கட்டுப்பாடும் இருந்து வருகிறது. பதினோராம் நாளாகிய தரிசனத்தன்று திருவெம்பாவை பாடிமுடித்து

மற்றப் பாட்டைப்பாடத் தொடங்குவதும் நடைபெறுகின்றது. இப்பதினொரு நாட்களைத் தவிர ஏனையகாலத்தில் திருவெம்பாவை பாடுவதாயின் "எம்பாவாய்" என்ற மகுடத்தை விடுத்து "ஏலோர்" என்றே நிறுத்திக்கொள்ளும் பழக்கமும் காணப்படுகிறது.

இத்தகைய பழக்க ஒழுக்கங்கட்கெல்லாம் அடிப்படையான விதிவிலக்கு யாண்டுளது, யாவர் ஏற்படுத்தியது, எக்காலத்தில் தோன்றியது என்ற கேள்விகட்கு இதுகாறும் தகுந்த விடை கூறப்படவில்லை. பொதுவாக ஆன்றோர் ஆசாரம், மடத்து சம்பிரதாயம், ஓதுவார்மூர்த்திகள் பாரம்பரைப் பழக்கம் என்றே கூறப்பட்டு வருகிறது. குறித்த பதினொரு நாட்களில் வேறு எப்பாடல்களையும் பாடுதல்கூடாது என்ற கட்டுப்பாட்டுக்கேனும் ஒருவாறு அர்த்தம் கூறலாம். அதாவது அந்நாட்களில் கூர்ந்து கூர்ந்து ஆழ்ந்து ஆழ்ந்து திருவெம்பாவை யொன்றையே ஒவ்வொருவரும் பயின்றால் அப்பனுவலின்கண்ணுள்ள செம்பொருள்கள் யாவும் மனதிற் படியும்; வேரூன்றிச் செல்லும் எனலாம். அப்பதினொரு நாட்கள் தவிர வேறு நாட்களில் திருவெம்பாவை பாடுதல் கூடாது என்ற கட்டுப்பாட்டுக்கு என்னவகையில் அர்த்தம் கூறமுடியும்? விலையுயர்ந்த ஆபரணங்களை சிற்சில விசேட நாட்களில்தான் அணிவது என்ற பழக்கத்தைப்போலன்றோ இது காணப்படுகிறது. ஆபரணங்களை நாடோறும் உபயோகிப்பதால் ஒளிமழுங்கும்; விலைகுறையும். திருவெம்பாவை போன்ற அருட்பனுவல்கள் அவ்வாறல்ல. நாடோறும் பயில்வதால் அருளொளி உலகெங்கும் வீசிப் பரவுமேயன்றி மழுங்கிக் குன்றாதே?

நவசத்திகள் தம்முள் ஒருவரை யொருவர் பிரேரித்து உலகசிருட்டி காரியம் செய்யும் உட்கருத்து திருவெம்பாவையிலுள்ள தென்றும், சிருட்டிக்கு விடியற்காலம் உவமை

யென்றும், தேவவருடத்தில் மார்கழிமாதமே விடியற்கால மென்றும், எனவே, மார்கழிமாதத்தில்தான் திருவெம்பாவை ஓதப்படுதல் வேண்டுமென்றும் ஒரு காரணம் கூறப்படுவது வழக்கம். மாணிக்கவாசக சுவாமிகள் திருவண்ணாமலையில் மார்கழிமாதத்தில் விடியற்காலையில் பெண்கள் ஒருவரை யொருவர் எழுப்பி அனைவரும் நீராடச் செல்வதைக் கண்டு பாவைப்பாட்டு என்ற முறையில் இப்பனுவலைப் பாடி இறுதி யிலும் "போற்றியாம் மார்கழி நீராடேலோரெம்பாவாய்" என்று கூறினர் என்ற சரித்திர காரணமும் கூறப்படுவது வழக்கம். இக்காரணங்களிலிருந்து திருவாதிரையை யடுத்த பதினொரு நாட்கள் என்ற கட்டுப்பாட்டுக்கு ஆதரவு அற்றுப் போகிறது; மாதம் என்ற கட்டுப்பாடு மட்டும் நிற்கிறது.

மாணிக்கவாசக சுவாமிகள் மார்கழிமாதத்தில் திருவெம் பாவை பாடினரென்பதிலிருந்து நாமும் மார்கழிமாதத்தில் திருவெம்பாவை பாடவேண்டும் என்பது பொருத்தமாகுமே தவிர ஏனைய மாதங்களில் பாடுதல் கூடாதென்பது எவ்வாறு பொருந்தும்? திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் வைகாசி மூலத்தன்று "கல்லூர்ப் பெருமணம்", "காதலாகிக் கசிந்து" என்ற பதிகங்கள் பாடி சோதியிற் கலந்தார் என்ற வரலாற்றிலிருந்து நாமும் வைகாசி மூலத்தன்று அச்சுவாமி கட்கு உத்ஸவம் செய்வித்து அப்பதிகங்களைப் பாடவேண்டும் என்ற கடமை யேற்படுமேயன்றி ஏனைய நாட்களில் அப்பதி கங்களைப் பாடுதல் கூடாது என்ற விதி ஏற்படுமா? இவ் வாறே பிற பனுவல்களையும் பாடும்பழக்கத்தை ஆராய்ந்தறி உண்மை புலனாகும்.

இக்கட்டுரையைக் காணும் ஓதுவார் மூர்த்திகளும் திரு மடத்தலைவர்களும் இப்போது வழங்கி வரும் பழக்கத்துக் குத் தகுந்த காரணங்கள் உளவாயின் அவற்றை விளக்கியும், காரணங்கள் இலவாயின் இப்பழக்கமும் தடையும் ஒழிக்கத்

தக்கனவென்று அஞ்சாது கூறியும் உபகரிப்பார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

காலதத்துவங் கடந்த கடவுளைப் பாடுவதற்குக் காலத் தடையிருத்தல் கூடாது. எக்காலத்திலும் எத்தகைய அருட் பாடலும் பாடலாம் என்பதே பொருத்தம். காலையில், கட்டுச் சியில், மாலையில், இரவில் சிற்சில பண்களைப் பாடுவது நலம் என்றவிதி அவ்வப்பண்கள் அவ்வக்காலங்களில் மிகுந்த இன் பத்தைத் தருமென்ற இயற்கையை யொட்டியுளதாகையால் அவ்விதியை எவரும் குறைகூறார். ஆனால் எல்லாவகையாலும் சிறந்த ஒரு அருட்பனுவல் வருடத்தில் பதினொரு நாட்களிற் றான் பாடப்படலாம், ஏனைய நாட்களில் பாடப்படுதல்கூடாது என்ற விதி மிகவும் கடுமையான விதி. எப்போதும் பாரா யணம் செய்யக்கூடிய பாடல்கள் மனப்பாடமாக வருதல் இயல்பு. ஆண்டுக்குப் பதினொருநாள் மட்டும் பாடுதற்குரிய பாடல்களை மறத்தல் இயல்பு. எனவே, சில ஆலயங்களில் ஓதுவார்மூர்த்திகள் திருவெம்பாவை உத்ஸவத்தில் புத்தகம் பாராது பல பிழைகளோடு பாடுவதையும், வேறு சில ஆல யங்களில் மனப்பாடமாக வைத்து மனமுருகிப் பாடாது புத்தகத்தைப் பார்த்துத் தடுமாறிப் படிக்கிறதையும் நாம் கண்கூடாகக் காண்கின்றோம். இக்குறைபாடுகள் விரைவில் நீங்குவதாக; திருவெம்பாவை நமது நாடெங்கும் எக்காலத் திலும் ஓதப்பெறுவதாக; திருவெம்பாவையுடை முதல்வன் திருவருள் என்றும் நிலவுவதாக.

## முக்கிய அறிக்கை

தங்கள் சந்தாவை 31-12-1934-க்குள் மணியார்டர் செய்க. செய்யாவிடில் 10-1-1935-ல் வி. பி. வரும். வி. பி யால் 3 அணா வீண் நஷ்டமாகும்.

# சைவத்தேர்வு* வினாக்கள்

## இளஞ் சைவப் புலவர் - I

காலம்—2½-மணி] [மார்க்கு—100

I (a) திருநீலகண்டத் திருப்பதிகமும் 'வாழ்கவந்தணர்' என்ற திருப்பதிகமும் பாடிய சந்தர்ப்பங்களைத் தெரிவிக்க.

(b) 'திருவங்கமாலை' என்ற பெயர்க்காரணத்தை விளக்குக.

II (a) 'எதுக்களாலு மெடுத்த மொழியாலு மிக்குச் சோதிக்க வேண்டா'
—இதற்குப் பொருள் வரைக.

(b) 'மோத்தையைக் கண்ட காக்கை' 'உழுத சால் வழியே யுழுவான்'
—இவ்வுவமானங்கள் எவ்வெப் பொருள்களை விளக்கவெழுந்தன?

III (a) கழலடி காணுதற்கு எவ்வகை விளக்கு வேண்டும்?

(b) 'அவையெல்லாம் ஊரல்ல அடவிகாடே': எவையெல்லாம்?

IV (a) திருவெம்பாவை போன்ற பாவைப் பாட்டுக்கள் தோன்றிய வரலாறு யாது?

(b) ஒண்ணித் திலநகையா யின்னம் புலர்ந்தின்றோ
வண்ணக் கிளிமொழியா ரெல்லாரும் வந்தாரோ

---

*இத்தேர்வு சமய சமாஜத்தால் 18-11-34-ல் நடத்தப்பெற்றது.

எண்ணிக்கொ டுள்ளவா சொல்லுகோ மவ்வளவுங்
கண்ணைத் துயின்றவமே காலத்தைப்போக்காதே
விண்ணுக் கொருமருந்தை வேத விழுப்பொருளைக்
கண்ணுக் கினியானைப் பாடிக் கசிந்துள்ளம்
உண்ணெக்கு நின்றுருக யாமாட்டோம் நீயேவந்
தெண்ணிக் குறையிற் றுயிலேலோ ரெம்பாவாய்

—இதற்குப் பொழிப்புரை எழுதுக.

(c) மாணிக்கவாசகர் தம்மை யாட்கொண்ட செய்தியைக் குறிப்பிடும் இரண்டிடங்கள் திருப்பள்ளியெழுச்சியினின்றுங் காட்டுக.

V (a) மூவகை வழிபாடுகளுள் இளையான்குடிமாறநாயனுர் மேற்கொண்ட வழிபாடு யாது?

(b) 'உண்டி நாலு விதத்தில்': நால்வகை யுண்டி யாவை?

(c) மாரிக்காலத் திரவினில் வைகியோர்
தாரிப்பின்றிப் பசிதலைக் கொள்வது
பாரித் தில்லம் அடைத்தபின் பண்புற
வேரித் தாரான் விருந்தெதிர் கொண்டனன்.

—சந்தர்ப்பங் காட்டிப் பொருள் விளக்குக.

VI (a) 'பாசப் பறிமுதல் பறிப்பார்போல' - இஃது எதனைக் குறித்தற்கு வந்த உவமானம்?

(b) 'புள்ளுறங்கும் வயல்புகப் போயினுர்': புள்ளுறங்கும் என்றதன் கருத்து யாது?

(c) அலக்கினை யறுத்து வீழ்த்தது எதன்பொருட்டு?

VII சுந்தரமூர்த்திசுவாமிகளது காலத்திருந்த நாயன் மார்களின் வரலாறுகளைச் சுருக்கி யெழுதுக.

VIII (a) இருவகைக் கடவுள்வாழ்த்துள் வள்ளுவர் கூறி யது எவ்வகையைச் சார்ந்தது ? யாது காரணத் தால் ?

(b) அருளுக்கும் பொருளுக்குமுள்ள தாரதம்மியங் களுள் மூன்றைக் குறித்திடுக.

(c) பொய்யாமை பொய்யாமை யாற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று

—அடுக்குகள் இரண்டும் எவ்வெப் பொருள் பற்றி வந்தன ?

IX புறத்துறுப் பெல்லா மெவன்செய்யும் யாக்கை
யகத்துறுப் பன்பி லவர்க்கு

—இதற்குப் பரிமேலழகர் கூறிய பொருள் யாது ? பிறர் கூறும் பொருள் எக்காரணங் கொண்டு மறுக்கப்படுகின்றது ?

X (a) மாணுக்கர் எத்தனை வகைப் படுவர் ? அவருள் தலைசிறந்தாரது இலக்கணம் யாது ?

(b) காபிலம், மாணுக்குலம், மேரு, உபாஞ்சு, அறு கற்பம் : இவற்றை விளக்குக.

XI (a) தீர்த்தம் எத்தனை வகைப்படும் ? அவை யாவை ?

(b) சுழுனையிற்சொல் லாமிரண்டுஞ் சுத்தநனு வாமத்
தழிவில்லா முத்திவலத் தாம்

—இதன் பொருளை விளக்கமா யெழுதுக.

---

# இளஞ் சைவப் புலவர் - II

காலம்—2½-மணி] [மார்க்கு—100

I ஒன்று மிகினு மொளிகவரா தேனுள்ள மென்று மகலா திருள்

—இதற்குப் பொருள் வரைக.

II (a) பாற்கலன்மேற் பூனை கரப்பருந்தல்

(b) எரியுறுநீர்

(c) உற்கைதரும் பொற்கை யுடையவர்

—இவை எவ்வெவ் வுண்மைகளை உவமான முகத்தால் விளக்கவந்தன ?

III (a) ஆணவமலம் இருளிற் கொடியதாதல் எப்படி ?

(b) ஆணவமலம் ஆன்மாவின் குணமன்று என்பது எவ்வாறு நிறுவப்படுகின்றது ?

IV ஐம்பூதங்களின் வடிவு, நிறம், எழுத்து, குறி, அதிதெய்வம் தொழில் : இவற்றை விவரிக்க.

V முத்தியிலே ஆன்மா இரண்டறக் கலத்தற்கு மனவாசகங் கடந்தார் காட்டும் உதாரணங்கள் யாவை ?

IV சிவப்பிரகாசம் எத்தனை அதிகாரங்களுடையது? அவற்றின்கண் கூறப்பட்டுள்ள பொருள்கள் யாவை ?

VII (a) பதியின் சொரூபவிலக்கணத்தையும் தடத்த விலக்கணத்தையும் விளங்க வுணர்த்துக.

(b) திரோதானசக்தி யென்பது யாது? அதனை 'மலம்' எனக் கூறுதற்குரிய நியாயம் என்ன ?

அன்போடு நல்ல நல்ல——இதற்குத் தெளிவான பொருளுரைக்க.

4. உமாபதியார் அருண்முறைத்திரட்டுத் தொகுத்தமுறை என்ன ?

5. ஆட்பாலவர்க்கு - இருமிலனுய் - அருந்துணையை என்னும் முதற்குறிப்பையுடைய பாசுரங்களை எழுதி அவை இன்னின்னர் வாக்கென்று சுட்டுவதோடு இன்னின்ன பகுதியில் அமைந்தனவென்று கூறி அவ்வமைவு பொருந்துமாற்றை விளக்குக.

6. மாணிக்கவாசகர் காலத்தை ஆதாரங்கள் காட்டி வரையறுக்க. [விடை இரண்டுபக்கத்தின் மிகலாகாது.]

7. சிவபுராணம் - கீர்த்தித் திருவகவல் என்ற சொற்றொடர்களை விளக்குக.

8. நாற்றத்தின் நேரியாய் - நிறங்களோ ரைந்துடையாய் - பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே-அணுத் தருந்தன்மையில்லோன் : இவற்றின் பொருளை நன்கு விளக்குக.

9. மாணிக்கவாசகர் வரலாற்று விவரங்களில் எவ்வெவற்றிற்கு நம் பாடப்பகுதியிலிருந்தே ஆதாரம் காட்டலாம்?

10. போற்றித் திருவகவல் முற்பகுதியிற் காணும் விஷயத்தைச் செவ்விய நடையில் தெளிவாக விளக்குக.

11. முன்னமே முனியாகி யெனையடையத் தவமுயன்ருன் : இதிற் குறித்த கதை யாது ?

12. சமணராசாரங்கள் இவையிவை யெனச்சுட்டி அவற்றைக் குறிக்கும் பெரியபுராணச் சொற்றொடர்களை எழுதுக.

13. அப்பர்காலத்து எவ்வேந்தன் அவரிருந்த நாட்டை அரசு புரிந்தான்? சாசன ஆதாரங்களுண்மை காட்டுக.
14. நாமார்க்கும் குடியல்லோம் என்ற பதிகம் எப்பொழுது பாடப்பட்டது? அரசன் அவரை அழைத்தான் என்பதற்கு அப்பதிகத்தில் ஆதாரம் காட்டுக.
15. சமணர்கள் அப்பரை எவ்வெவ்வகையிற் றுன்புறுத்தினார்கள்? அத்துன்பங்களுக்கும் அவர் அச்சந்தர்ப்பங்களிற் பாடியதாகச் சொல்லும் தேவாரப் பதிகங்களுக்கும் பொருத்தங் காட்டுக.
16. அப்பர்க்குச் சிவபிரான் இலச்சினை யிட்டருளிய வாலாறென்ன?
17. அப்பர் புராணத்தில் வேறு எவ்வெந் நாயன்மார் பெயர்கள் குறிக்கப்பட்டன? சந்தர்ப்பம் என்ன?
18. திருக்குறளினின்றும் மெய்கண்ட சாத்திரங்களிலே எடுத்தாளப்பட்ட குறள்கள் யாவை?
19. பின்வரும் குறள்களுக்குப் பரிமேலழகருரை எழுதுக:
   (அ) மனைத்தக்க மாண்புடைய ளாகித் தற்கொண்டான்
   வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.
   (ஆ) உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றும்
   கல்லா ரறிவிலா தார்.
   (இ) நாளென வொன்றுபோற் காட்டி யுயிரீரும்
   வாள துணர்வார்ப் பெறின்.
   (ஈ) எப்பொருளெத் தன்மைத் தாயினும் அப்பொருள்
   மெய்ப்பொருள் காண்ப தறிவு.
20. ஆரியன்பா லன்பாகி யாய்ந்தா கமமனைத்து நேரியவே தாந்த நிலையும்——இதற்குப் பொழிப்புரைத்து வேதாந்தமென்றதைத் தெளிவுபடுத்துக.

21. மூன்றுவகைத் தீக்ஷைகளை இன்னவெனக் குறித்து அவற்றினியல்பை விளக்குக.

22. மூவகைச் சித்திகளை விளக்குக.

23. உண்டு மணிகள் பலவு மவற்றுள்ளுங்-கண்டி விசிட்ட மெனக் காண். இதற்குப் பொழிப்புரைக்க.

24. அந்தரியாக பூசை செய்யும் முறை யாது?

25. சைவர் எத்தனை வகையினர்? ஆலயங்களில் அர்ச்சனை புரிதற் குரியர் யாவர்?

---

## சைவப் புலவர் - II

காலம்—3-மணி] [மார்க்கு—100

1. சிவஞானபோதத்தின் தொகை வகை முதலியன இன்னவெனக் கூறி அதன் அமைப்பை நன்கு விளக்குக.

2. அத்துவிதம் என்ற சொல்லின் பொருளைத் தெளிவாய் உரைக்க.

3. ஐம்புல வேடரி னயர்ந்தனை என்றது ஏகதேச வுருவக மாமாற்றை விளக்குக.

4. மூவகை யுயிர்க்கும் ஞான நிகழுமாறு எங்ஙனம்?

5. ஊசல் கயிறற்றாற் றாய்தரையே யாம்—வேம்பு தின்ற புழு—இங்குளி வாங்குங் கலம் என்னும் உவமைகள் எவ்வுண்மையை விளக்கும்.

6. பின் வருவனவற்றிற்கு உரை யெழுதுக:

(அ) செல்லிற் குமிய நிகழ்செம்பி னிற்களிம்புஞ்
சொல்லிற் புதிதன்று தொன்மையே—வல்லி

மலகன்ம மன்றுளவாம் வள்ளலாற் பொன்வா
ளலர்சோகஞ் செய்கமலத் தாம்.

(ஆ) அஞ்செழுத்தா லுள்ள மரனுடைமை கண்டரனை
யஞ்செழுத்தா லர்ச்சித் திதயத்தி-லஞ்செழுத்தாற்
குண்டலியிற் செய்தோமங் கோதண்டஞ் சானிக்கி
லண்டனுஞ் சேடனு மங்கு.

7. அறுவகைச் சமயத்தோர்க்கு என்னும் மங்கல வாழ்த்தில் பன்னிரண்டு சூத்திரப் பொருளும் அடங்கிக் கிடந்தமை காட்டுக.

8. சிவனது தடத்த வடிவம் எத்தன்மையது? சித்தியாரில் உரைத்தாங்கு விளக்கமாக வுரைக்க.

9. கவர்தரு பேதத்தின் வகை யென்ன?

10. ஆர்ப்பாய காயங் தன்னை ஆன்மா நின்றூட்டுவதற்கும் உயிர் காவலாக ஆன்மா உடலினில் அஞ்சவத்தையுறுதற்கும் கூறப்பட்ட உவமைகள் என்ன?

11. கேவல சகல சுத்தாவத்தைகளின் இயல்பென்ன?

12. ஆன்மாச் சதசத்தாதல் எங்ஙனம்?

13. மூவகை ஞானம் யாவை? அவற்றின் இயல்பென்ன?

14. இந்தனத்தி னெரிபாலி னெய்பழத்தி னிரத மெள்ளின்க ணெண்ணெயும்போ லெங்குமுள னிறைவன்—இதற்கு நுட்பவுரை எழுதுக.

15. பூர்வாசாரியர் சிவாகமத்தின் வழி விதித்த பத்ததிகள் இரண்டும் அவற்றைப் பெயர்த்துச் செய்த நூல்கள் இரண்டும் இன்னவென் றுரைக்க.

16. அகோர சிவாசாரியர் பத்ததியி னியல் பென்னை?

17. சித்தாந்த மரபு கண்டன கண்டனத்துக்கு ஆதாரமாகிய முன்னூல்கள் எவை? அவற்றை யியற்றியோர் யாவர்?

18. எடுத்து என்னும் சொல்லுக்கிட்ட வயிரக்குப்பாயத்தின் வரலாறென்ன?

19. சித்தசாதனம் - பிரகரணசமம் - அருத்தாந்தரம்; இவற்றை விளக்குக.

20. பூர்வமீமாஞ்சை யுள்ளும் உத்தரமீமாஞ்சை யுள்ளும் சொற்பொரு டுணிவிக்கும் கருவியென முறையே காட்டப் படுவன யாவை? அவற்றைச் சுருக்கமாக விளக்குக.

21. சிவ சமவாதவுரை யாரியற்றியது? அதனியல் பென்ன?

22. 'உரை தருமிப் பசு வர்க்கம்' என்பதற்கு உரையும் மறுப்பும் காட்டுக.

# திருஞானசம்பந்தர் பதிக அமைப்பு

[ஈ. ந. தணிகாசல முதலியார், பி. ஏ., பி. எல்.]

(மலர் எ. இதழ் ககூ. ருடுஉ-ம் பக்கத் தொடர்ச்சி)

நீர்வளங் கண்ட தொண்டர் மலையடிவாரத்திற்குச்செல்லும் வழியில் நிலவளத்தைக் காண்கின்றார். குறிதப்பாது அடிக்கும் வில்லாளிகளான வேடர்களும் கலியாண குணத்தினராய்த் திகழ்வது அந்நிலத்தின் தன்மை யன்றோ?

"நெறிநீர்மையர் நீள்வானவர் நினையும்நினை வாகி
அறிநீர்மையி லெய்தும்மவர்க் கறியும்மறி வருளிக்
குறிநீர்மையர்* குணமார்தரு மணமார்தரு குன்றில்
எறிநீர்வயல் புடைசூழ்தரு மிடும்பாவன மிதுவே."

*Vide 10th Stanza l. 3.

இந்நிலம் தனது வளத்தினாலே செந்நெலும் *விளைவிக்கும். வயல்களுக்கு நீர்பாய்ச்சலின்றியே சுற்றிலும் ஓடும் நீரோ இதில் ஊற்றை உண்டாக்கி நல்ல விளைவும் தரும். இந்த அழகை சிலேடையால் ஆளுடைய பிள்ளையார் †"நீரேறிய திருமேனியர்....ஏறேறிய இறைவர்க்கிடம்" என உழவு பூமியின் உருவத்தையும், சிவபெருமான் திருவுருவத்தையுஞ் சேர்த்துப் பாடுவர்.

இவ்வாறு திரிகரண சுத்தமாய்த் திரு இடும்பாவனத் திருக்கோயிலை வழிபாடு செய்து அம்மலையின் மூவளங்களாலும் அவ்வன்பர்கள் ஐம்புலன்களும் இன்பம் நுகர, மலையின் அடிவாரம் வந்தபோதே, கயிலாய மலை அடிவாரத்தில் நெரிக்கப்பட்டுச் சீர்திருந்திய இராவணன் பேற்றைப்போல் ஆணவமலம் அறுபட்டு மயலெய்தும் மருளான இருள் நீங்கியும் மாயையின் இடுக்கண் பலவற்றை யொழித்தும் வினையின் நீங்கி விளங்குவரென்பதைக் குறிப்பிடுவதுபோல், முறையே இப்பதிகத்தில் 8, 9, 10, 11 செய்யுட்கள் பாடப் பெற்றிருக்கின்றன.

எனவே, இப்பதிகம், அருட்செல்வம், பொருட்செல்வத்துடன் கலக்கவும, இம்மையின் இன்பத்துடன் மறுமையின் இன்பம் கலக்கவும் ஐம்புலன் சுத்தத்துடன் அந்தக்கரண சுத்தம் நேரவும், பிறவிக் கடல் நீந்துவதுபோல் வங்கங்களால் கடல் கடந்து இடும்பாவனக் கரை சேர்ந்த "ஓலம்" என்னும் தாமும் அம்மலைப் புண்ணிய தீர்த்தக் கரை சேர்ந்து மலையேறும் அன்பர் வாழ்க்கையின் அழகை ஆளுடைய பிள்ளையார் கலையொளியில் இங்கு காணலாம்.



---

*"நீரேறிய திருமேனியர் நிலவும் உலகெல்லாம்
பாரேறிய படுவெண்டலை கையிற்பலி வாங்காக்
கூரேறிய மடவாளொரு பாகம்மகிழ் வெய்தி
ஏறேறிய இறைவர்க்கிடம் இடும்பாவன மிதுவே."

†வில்லைக்குணத் தோனி செய்தலென்னும் பொருளும் பொருந்துவது காண்க. குறிநீர்மையர் என்பது விலங்குகளைக் குறிதப்பாமல் அம்பால் அடிக்கக் கூடிய சாமர்த்திய முடையவர் என்றும்.

# திலகவதியார்

[ஈ. த. இராஜேசுவரியம்மாள், எம். ஏ., எல். டி.]

"சந்திரற் சடையில் வைத்த சங்கரன் சாமவேதி
அந்தரத் தமரர் பெம்மான் ஆன்நல் வெள்ளூர்தி யான்றன்
மந்திரம் நமச்சிவாய ஆகநீறணியப் பெற்றால்
வெந்தறும் வினையும் நோயும் வெவ்வழல் விறகிட்டன்றே."

இன்றைத் தினம் திருநாவுக்கரசுநாயனாருக்குப் பஞ்சாட்சரமும் திருநீறுந்தந்து சூலை வினையையும் பழைய வினையையுந் தீர்த்த பெருமாட்டியாராகிய திலகவதியாரைப்பற்றிய சொற்பொழிவு*. ஆயினும் அது எளிய விஷயமன்று; அப்பர் சரித்திரத்தில் ஒரு பாகமாயினும் இப்பாகமே மிகவும் கடினமானதாய் அறிவை மயக்குவதாய், ஆராய்ச்சித் துறைகளில் பல அடக்குவதாய், நீதிகளும் போதிப்பதாயிருக்கிறது. பொதுவில் அப்பர் சரித்திரமே "ஒரு நாவுக்கு உரைசெய்ய ஒண்ணுமை" ஆனதெனச் சேக்கிழார்பெருமான் கூறுவதால், இது, அச்சருக்கத்திற்கு இருதயகமலமாய் விளங்குவதாதலால், ஆராய்ச்சிக்குத் தெற்றெனப் புலப்படாததாம். ஆகையால் அடியேன் சிற்றறிவுக்கு எட்டியவாறு, சேக்கிழார் கூற்றைப்பற்றியும், அது எழுப்பும் ஆராய்ச்சித் துறைகளைப் பற்றியும் இங்கு சில கூறத்துணிந்தேன். ஆதலால் பெரியோர் குற்றங்களைந்து, இங்கு அடியேன் எழுப்பிய ஐயங்களையும் ஆராய்ந்து அவற்றுக்குத் தக்க முடிவுகளை வெளியிடுவாராக. சேக்கிழார் கூறிய அசாதாரண முன்னுரைபோல் முடிவுரையும் :—

"அடியனேன் ஆதரவால் ஆண்டவரசின் சரிதப்
படியை யான் அறிந்தபடி பகர்ந்தேன்."

என்றார். அவர் பகர்ந்த திலகவதியார் சரித்திரத்தைச் சுருக்கமாகக் கூறி, அது எவ்வாறு பலவித ஐயங்களை எழுப்புகின்றதென்றும், அவற்றிற்கு அறிஞர் எவ்வாறு ஆராய்ச்சிசெய்ய வேண்டுமென்றும் இங்கு செப்புதலே என்னுடைய கடனாகும்.

---

*சென்னை இராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜன சபையின் 30-ம் ஆண்டு விழாவில் 7-10-34-ல் நிகழ்த்தப்பெற்றது.

திருமுனைப்பாடி நாட்டிலே நம்பியாரூரர் திருவவதாரம் செய்வதற்கு முன்னர்த் திருவாமூர் என்னும் ஒரு திருப்பதி இருந்தது. அது சுற்றிலுள்ள அந்நாட்டு ஊர்களைக் காட்டிலும் வேளாண்மை செழித்ததாம். பெண்ணாற்றுப் பாய்ச்சலால் நெற்பயிர் சிறந்து வேளாண்குடிகள் ஈகைத்தன்மை ஓங்க அதில் நிறைந்திருந்தனர். "இரப்பவர்க் கீயவைத்தார், ஈபவர்க்கருளும் வைத்தார்" என்னும் கொள்கை வாய்ந்த அக்குடிகளில் குறுக்கையர் குடி மிகவும் புகழ்பெற்றதாம். அப்புகழ்பெற்ற குடியில் "புகழனார்" என்பவர் திருவவதாரம் செய்து "மாதினியா"ரை மணம் புரிந்தனர். அவர் திருவயிற்றில் திலகவதியாரும், மருணீக்கியாரும் முறையே அவதரித்தனர். அத்திலகவதியார் பிறந்ததைச் செந்தாமரை இதழில் பிறக்கும் திருவுக்குச் சேக்கிழார் பெருமான் ஒப்பிடுவார்.

"புகழனார் தமக்குரிமைப் பொருவில் குலக்குடியின்கண்
மகிழவரு மணம்புணர்ந்த மாதினியார் மணிவயிற்றில்
திகழுமலர்ச் செங்கமல திருவிதழின் அக வயினிற்
திகழவருந் திருவனைய திலகவதியார் பிறந்தார்."

இதைப்பற்றிப் பின்னர் விவரிப்பாம். இவர் பின் பிறந்த மருணீக்கியார் கல்விகற்று சகலகலைகளிலும் வல்லவராயினர். இவ்வம்மையார் பன்னிரண்டு ஆண்டு பெற, அக்காலத்தில் பல்லவன் சேனுபதியான கலிப்பகைக்கு விவாகம் செய்வதாக நிர்ணயிக்கப்பட்டனர். ஆயினும் மணவினை முடிவதற்கு முன் கலிப்பகையார் வடநாட்டிற்குப் பல்லவன் படையைச் செலுத்திப் பலகாலம் போர்நடத்தலானர். இதன் மத்தியில் புகழனார் சிவகதியடைய அவர் மனைவியாரும் அவருடன் உடன்கட்டை ஏறினர். பின்னர் மருணீக்கியார் திலகவதியார் பாதுகாப்பில் இருந்து வந்தனர். அவ்வம்மையாரும் அவரைத் தாய்தந்தைபோல் பேணிவந்தனர்.

இக்காலத்தில் கலிப்பகையார் வடநாட்டில் போர்வென்று வீரசுவர்க்கம்பெற்றனரெனச் செய்திவந்தது. இறந்தவர் தமக்குக் கணவனெனப் பெற்றோர் நியமித்ததால் அவர் மாண்டபின் தாமும் உயிர்துறக்க எண்ணிய தமக்கையாரை மருணீக்கியார் அடிபணிந்து, அழுதுவேண்டுதலால் திலகவதியார்

மறுமணம் எண்ணாது இறைவன் பணிசெய்ய ஆரம்பித்துத் தம்பியையும் பாதுகாத்து வந்தனர். அக்காலத்தில் சமண மதம் எங்கும் பரவியிருந்தது. சிவபெருமான் திருவருள் இன்மையாலும் சமணமதம் கொல்லா விரதத்தைப் போதித்ததாலும் அம்மதமே எம்மதத்திற்கும் சிறந்ததெனமருணிக்கியார் கொண்டு சமணரானார். பின்னர் சமணருக்கு குருவாகித் தருமசேனர் என்னும் நாமம் வகித்தனர். இவ்வாறு சமணருடன் சேர்ந்து சமணப்பள்ளியிலுள்ள தம் இளையோனை மீட்டும் சைவநெறிக்குத் திருப்பி ஆட்கொள்ள வேண்டுமென்று திலகவதியார் சிவபெருமானை வேண்டுதலும், அவர் வேண்டுகோளுக்கு இணங்கி மருணிக்கியாருக்குப் பரமன் சூலை நோய்தந்தனர். சமணர்கள் சிகிச்சைகள் யாவும் பயன்படாது போகத் தருமசேனரான மருணீக்கியார் தமக்கையை எண்ணி வருந்தி ஓர் ஆள்வசம் தமக்கையை வரும்படி சொல்லி யனுப்பினார். இச்சங்கதியை ஆள் திலகவதியாரிடம் சொல்ல, அவ்வம்மை, 'சமண்பள்ளிக்கு யான் வாரேன்' என்று பதில் சொல்லி யனுப்பினார். இச்சங்கதி கேட்ட தருமசேனர், 'இனியானே அங்கு செல்வேன்' என்றுசொல்லி எழுந்து வெள்ளுடை தரித்து யாரும் அறியாது திருவதிகைக்குச் சென்று அங்கு திருக்கோயிலில் திருப்பணிகள் செய்யும் தமக்கையாரைக் கண்டனர். இவ்வாறு கண்டு பணிந்த தம் பின்னோனுக்கு, திருநீறும், பஞ்சாட்சரமும் அம்மையார்தர, அவைபெற்று மருணீக்கியார் சூலையின் வெப்பம் தணிந்தனர். அக்காலத்தில் 'கூற்றாயினவாறு' என்னும் திருப்பதிகம் மருணிக்கியார் பாடியதாயும் அதனால் அவர் 'திருநாவுக்கரசு' என்னும் பட்டம் சிவபெருமானிடம் பெற்றதாயும் பெரிய புராணம் கூறும்.

அப்பர் சரித்திரத்தில் இப்பாகத்திற்குமேல் திலகவதியாரைப்பற்றி யாதொரு வாலாறும் கூறப்படவில்லை. கூறிய வரலாறும் (Double Time) இருவகைக் கால அளவுகள் காட்டுகின்றது. ஷேக்ஸ்பியர் (Shakespeare) நாடக அமைப்புபோல் சேக்கிழார் வரலாறு இருவகைக்கால அளவுகள் தோன்ற பாடி யிருக்கின்றார். இவ்வாலாறு சைவ

மக்கள் யாவரும் அறிந்ததே. யாவருக்கும் தெரிந்த இவ் விஷயத்தை மறுபடியும் என் புன்மொழியால் கூறி முடியாக் கதையாய் விடவேண்டியதாயிற்று. இது யாருடைய குற்றம்? தமிழ் மக்களின் குற்றமா? இவ்வம்மையார் அறுபத்துமூவரில் ஒருவரா யிருக்கக்கூடியவர்; அங்கும் காணப் படவில்லை. அது நமது இலக்கியத்திற்கும் சமயத்திற்கும் விபரீதச் செய்கை யன்றோ?

இனி இததகைய நிலைமைச் சேக்கிழார் உணர்ந்தாரா? உணர்நது அதற்கு யாதேனும் பரிகாரம் தேடினாரா? என்று ஆராய்வோம். இலக்கிய ஆராய்ச்சியில் சேக்கிழாரைப்போல் செய்தவர் ஒருவருமில்லை. சதாரணமாய் முதல்தரக் கவிகளாய் இருப்பவர் (First rate poets) இலக்கிய ஆராய்ச்சியில் வல்லுனராய் (Literary Critics) இருப்பது அரிது. இலக்கிய ஆராய்ச்சியில் வல்லுனரா யிருப்பவர் முதல்தரக் கவிகளா யிருப்பது அரிது. அவ்விரண்டு சிறப்பும், தன்மையும் பொருந்தியவர் சேக்கிழாரே. திருநாவுக்கரசு நாயனார் புராணம் ஆரம்பிக்கும் காலத்திலேயே, தாம் கர்ணபாம்பரையாய்க் கேட்ட கதைகளினின்றும் தொகுத்த அச்சருக்கத்தில் பலருக்குப் பல சங்கைகள் எழுப்ப இடந் தரும் என்பது அவர் அறிந்ததே. ஆதலால் அவையடக்கமென்று நாம் ஏமாறத்தக்க முன்னுரையும் முடிவுரையும் அவர் கூறுகின்றார். ஆனால் அவர் நூலுக்கு அவையடக்கம் கூறவேண்டிய இடம் அதுவன்று. ஏனெனில் திருநின்ற சருக்கம் சுந்தரமூர்த்தி நாயனார் புராணத்தில் ஒரு கிளைக்கதை. புராண ஆரம்பத்தில் அவையடக்கம் கூறியாயிற்று. மூன்று செய்யுளில் கூறியதில் முடிவான செய்யுள் பின்வருமாறு பாடப்பட்டது:—

“செப்பலுற்ற பொருளின் சிறப்பினால்
அப்பொருட் குரையாவருங் கொள்வரால்
இப்பொருட் கென்னுரை சிறிதாயினும்
மெய்ப்பொருட் குரியார்கொள்வர் மேன்மையால்.”

என்று முதலிலே பாயிரத்தில் அவையடக்கம் செப்பிமுடித்தார். ஆதலால் திருநின்ற சருக்கத்தின் முதல் செய்யுளும் இறுதிச் செய்யுளும் அவையடக்கமென நாம் கொள்வோ

மாயின், அது கூறியது கூறல் என்னும் குற்றத்தின்பாற் படும். ஆகையால் இவை அவையடக்கமேயல்ல. ஏனைய சருக்கங்களில் இவ்வாறு இவர் மொழியும் செய்யுள்கள்முதலி லும் முடிவிலும்காணப்படவில்லை. அறுபத்துமூவர் கதைகளும் கர்ண பரம்பரையாய் இவர் கேட்டு எழுதியிருக்க, இச்சருக் கத்திற்கு மாத்திரம் முன்னுரை முடிவுரை இவ்வாறு இவர் ஏன் சொல்லவேண்டுமென்று நாம் ஆராயப் புகுவோமானல் அவர் சொற்றொடர்களினின்றே சில ஒளிகள் காணப்படுகின் றன. அவர் முதற்செய்யுளானது பின்வருமாறுபாடப்பட்டது.

" திருநாவுக் கரசுவளர் திருத்தொண்டின் நெறிவாழ
வருஞானத் தவமுனிவர் வாகீசர் வாய்மைதிகழ்
பெருநாமச்சீர் பரவ லுறுகின்றேன் பேருலகில்
ஒருநாவுக் குரைசெய்ய ஒண்ணுமை யுணராதேன் "

" வாய்மைதிகழ் பெருநாமச்சீர் " என்னும் சொற் றொடரைக் கவனிக்க. அதாவது உண்மையில் இம்மியும் பிறழாத உண்மையான சரித்திரக் கீர்த்தி என்பது பொருள். இக்காலத்தில் சரித்திரங்கள் எழுதுவோர்போல மனம்போன போக்கில் வேண்டுவன சேர்க்கும் எண்ணமுடையவ ரல்லர் சேக்கிழார்பெருமான். இதனால்தான் திலகவதியார் சரித்தி ரம் ஒரு முடிவுங்கொடாமல் நிறுத்தப்பட்டிருக்கின்றது. அப் பர் சமணத்தினின்று நீங்கிச் சைவரானவுடன் தம் பிறவியின் காரணம் முடிந்ததனல் திலகவதியார் சிவபத மடைந்தன ரென்று சேக்கிழார் முடிவுசெய்து விட்டிருக்கலாம். ஆயினும், அவர் எக்காலத்தில் சிவபதம் அடைந்தாரென்பது கர்ண பரம்பரையான கதைகளால் விளங்காதிருக்கத் தாம் அதை நூதனமாய் நுழைக்க அவருக்கு மனமில்லை. அவ்வாறு வெளிப்படையிலும் அதை மொழிய எண்ணுமல் குறிப்பாய்த் திலகவதியாரைச் செந்தாமரையில் விளங்கும் திருவுக்கு ஒப்பிடுகின்றார். அதாவது செந்தாமரையை நாம் சாதாரண மாகக் காணலாமெனினும், அதிலுள்ள திருவைக்கண்டறிவது எவ்வளவு கடினமோ அவ்வளவு அரியதாய்த் திலகவதியார் நிற்கின்றார் என்னும் கருத்தும் அதில் பொருந்தும்.

" புகழனுர் தமக்குரிமைப் பொருவில் குலக்குடியின்கண்
மகிழவரு மணம்புணர்ந்த மாதினியார் மணிவயிற்றில்

நிகழுமலர்ச் செங்கமல நிரையிதழி ளின்அகவயினிற்
நிகழவருந் திருவனைய திலகவதியார் பிறந்தார் ”

மற்றும் திருநின்ற சருக்கத்தில் முதல் செய்யுளில் சேக்கிழார் கூற்று மிகவும் ஜாக்கிரதையாய் கவனிக்கவேண்டியதாயிருக்கிறது. “வாகீசர் வாய்மைதிகழ் பெருநாமச் சீர் பரவ லுறுகின்றேன் பேருலகில் ஒருநாவுக்குரை செய்ய ஒண்ணாமை உணராதேன்” என்னும் அடிகளுக்கு மகாலிங்க ஐயர் பின்வருமாறு உரை கூறுகிறார் :—

பரவலுறுகின்றேன் பேருலகில் என வாக்கியத்தை முடித்து, ஒரு நாவுக்கு என்பதை வேற்றுமை யுருபு மயக்கமாகக் கொண்டு என்னுடைய ஒரு நாவினால் என்று பொருள் கூறுகின்றார்.

“யாத னுருபிற் கூறிற் றாயினும்
பொருள் செயன்மருங்கின் வேற்றுமை சாரும்”

என்னும் நன்னூல் விதியால் இவ்வுரை அமையுமாயினும் உருபு மயக்கமின்றி மற்றொரு பொருளும் அவ்வடிக்கு அமைவது காணலாம். ‘பேருலகில் ஒருநாவுக்கு உரைசெய்ய ஒண்ணாமை யுணராதேன்’ எனக்கொண்டு இவ்வுலகத்திலே ஒரு நா அல்லது ஒரு மனிதனுக்கும் பதில் சொல்லச் சக்தி யற்றவனாய யான் பெருநாமச்சீர் பரவலுறுகின்றேன் என உரை கொள்ளலாம். இவ்வுரை ஏன் பொருந்துமெனின் சேக்கிழார் ஆராய்ந்த அப்பர் வரலாறுகளுக்கும் அவரைப்பற்றிச் சேகரிக்கக்கூடிய தேவார அகச்சான்றுகளுக்கும் சில இடங்களில் பொருந்தாமையே யாம்.

திலகவதியாரைப் பற்றி அப்பர் ஏன் ஒரு வார்த்தையும் கூறவில்லை என்பது யாவருக்கும் எழக்கூடிய சங்கை. மிகவும் இனிய சுற்றங்களைக் கூறும் ஒரு செய்யுளில் தமக்கை என்பதை அப்பர் காட்டவில்லை.

“அப்பன்நீ அம்மைநீ ஐயனுந்நீ
அன்புடைய மாமனும் மாமியுந்நீ
ஒப்புடைய மாதரும் ஒண்பொருளுந்நீ
ஒருகுலமுஞ் சுற்றமும் ஒருருந்நீ

தய்ப்பனவும் உய்ப்பனவும் தோற்றுவாய்நீ
துணையாய் என்நெஞ்சந் துறப்பிப்பாய்நீ
இப்பொன்நீ இம்மணிநீ இம்முத்தம்நீ
இறைவன்நீ ஏறூர்ந்த செல்வன்நீயே"
(அப்பர் - தனித் திருத்தாண்டகம்.)

என்பதில் தமக்கை என்பது தனியாய் வரவில்லை. திருமறு மாற்றத் திருத்தாண்டகத்திலும் தாம் "துகிலுடுத்துப் பொன் பூண்டு திரிவார் சொல்லும் சொற்கேட்கக் கடவோமோ" என்றதனல் தம் தமக்கையார் வார்த்தைக்கு உட்பட்டுத் தாம் சைவரானதாக அச் சொற்றொடர்கள் காட்டவில்லை.

திருமறுமாற்றத் திருத்தாண்டகம்போல் ஈற்றுச் செய்யுளில் பிரமனும் மாலும் அடிமுடி காணுத சரித்திரம் காட்டும் பதிகங்கள் அப்பர் திருமுறைகளில் பல உள. அவையெல்லாம் அப்பர் சமணத்தினின்று சைவரான பிறகு சில மாதங்களுக்குள் பாடியதாகக் காணப்படுகின்றன. அவற்றிலும் தம் தமக்கையைப்பற்றி யாதுங்காணப்படவில்லை. ஆகையால் திருவதிகைவீரட்டானத்தில், 'நம்பனே எங்கள்கோவே' என்று ஆரம்பிக்கும் திருநேரிசைத் திருப்பதிகம் நான்காம் திருமுறையில் காணப்படும். அது, பத்தாம் செய்யுளில்,

"திருவினன் கொழுநனுந் திசைமுக முடைய கோவும்
இருவரு மெழுந்தும் வீழ்ந்தும் இணையடி காணமாட்டா"

என்னும் விஷயம் பொருந்திய திருக்கடைக்காப்புச் செய்யுள் பெற்றது அப்பதிகத்தை முற்றும் நோக்குவோமாயின் அப்பர் சமணத்தைவிட்டு வந்த சில காலத்திற்குள் பாடியதென்பதற்கு யாதொரு ஐயமுமில்லை. அதிலுள்ள அகச்சான்றுகளை நோக்குங் காலத்தில் அப்பர் சூலைநோய் ஒன்றினலேயே சமணத்தைக் கைவிட்டதாகக் காணப்படவில்லை. சைவத்திற்கும் சமணத்திற்கும் உள்ள தாரதரங்களைத் தருக்க வழியில் ஆராய்ந்து சைவத்தின் மேன்மையை உணர்ந்தே சமணத்தை அப்பர் கைவிட்டதாகப் பலகுறிப்புகள் அதில் உள. மூன்றுவது செய்யுளில்,

"நீதியால் வாழமாட்டேன், நித்தலுந் தூயேனல்லேன்,
ஓதியுமுணர மாட்டேன், உன்னை யுள்வைக்கமாட்டேன்,

சோதியே; சுடரே! உன்தன் தூமலர்ப் பாதங்காண்பான்
ஆதியே; அலந்து போனேன், அதிகைவீரட்டனீரே"

இன்னும் ஆறுவது செய்யுளில்,

"உறுகயிறூசல் போல வொன்றுவிட் டொன்று பற்றி
மறுகயி றூசல் போல வந்து வந்துலவு நெஞ்சம்
பெறு கயிறூசல் போலப் பிறை புல்குசடையாய் பாதத்
தறுகயிறூசல் ஆனேன் அதிகைவீரட்டனீரே"

என்பதும் காண்க. இதன்றியும் இத்திருவதிகை வீரட்டானச் செய்யுளில் சமண்கையைப் பற்றி யாதொன்றும் கூறுது:—

"தெருளுமா தெருளமாட்டேன் தீவினைச் சுற்றமென்னும்
பொருளுளே யழுந்திநாளும் போவதோர் நெறியுங்காணேன்"

என்று சுற்றத்தாரைப் பற்றி மாத்திரம் கூறியிருக்கிறுர். சேக்கிழார் எழுதிய வரலாற்றின்படி ஏதோசிலநாள் சூலை நோயில் வருந்திப் பின்னர் சைவத்தை அங்கிகரித்த உடனே அப்பர் ஞானமும் தேகதிடமும் பெற்றிருப்பின், இப்பதிகத்தில் எட்டு ஒன்பது செய்யுட்களில் முறையே,

"மன்றத்துப் புன்னைபோல் மரம்படுதுயரமெய்தி
ஒன்றினுலுணா மாட்டேன் உன்னையுள்வைக்க மாட்டேன்"

என்றும்,

"பிணிவிடா யாக்கை பெற்றேன் பெற்றமொன்றேறுவானே
பணிவிடா இடும்பை யென்னும் பாசனத் தழுந்துகின்றேன்"

என்னும் சொற்றொடர்கள் வருவது எங்ஙனம்?

இத்தன்மையான செய்யுட்களே திருவதிகையைவிட்டுச் சிதம்பரத்துக்கு அப்பர் சென்றபோது பாடிய "பத்தனய்ப் பாடமாட்டேன்" என்னும் திருப்பதிகத்திலும் காணலாம். சமணத்தை விட்டுச் சைவத் தமக்கையாரிடம் சேர்ந்த இவர், தம் கிளையுடன் சேர்ந்ததாகப் பாடாமல்,

"கேட்டிலேன் கிளைபிரியேன் கேட்குமா கேட்டியாகில்
காட்டினேன் நின்றன்பாதம் கடப்பட நெஞ்சினுள்ளே
மாட்டினீர்"

என்றும், தம் சித்தை திகைத்திருப்பதாயும் தம்மைக் கண்டு காரும் "மாண்பலா நெறியி லுள்ளவர்கள்" கனைக்கின்றன

ரென்றும் பாடுகின்றார். ஆதலால் இவற்றைச் சேக்கிழார் தம் அப்பர் வரலாற்றுக்கு எவ்வாறு பொருந்தக்கூடுமென்று உணராதவரல்லர்.

இது இவ்வாறிருக்கத் திலகவதியார் வரலாறு சரித்திர உண்மைக்குப் பொருந்தியதா, பொருந்தாததா என்று ஆராய்வோம். திருநாவுக்கரசு நாயனர் தன்மையை உற்றுநோக்கின் உடல்மேல் ஆசை வைத்தாவது, ஆயுளை வளர்க்கவாவது எண்ணிச் சமணத்தை விட்டுச் சைவத்திற்கு வந்தவரென்று எண்ணுவதற்கு அவர் தேவாரம் இடங் கொடுக்கவில்லை.

"பாறினாய் பாவிநெஞ்சே பன்றிபோ லளற்றிப்பட்டுத்
தேறிநீ நினைதியாயிற் சிவகதி திண்ணமாகும்
ஊறலே யுவர்ப்புநாறி உதிரமே யொழுகும் வாசல்
கூறையால் மூடக்கண்டு கோலமாய்க் கருதினாயே"

என்பவர் உதிரத்தையும், இறைச்சியையுமுடைய தேகத்தை ஒரு பொருளாக எண்ணித் தமக்குச் சம்மதமான மதத்தை (மருணீக்கியார்) கைவிடுபவர் அல்லர். சூலைநோய் வந்தபோது தம் தமக்கையைக் காணவேண்டுமென்று கருதியது எல்லா மனிதருக்கும் உள்ள இயற்கைத் தன்மையே யாகும். தமக்கையைப் பார்த்துப் பிறகு உயிரை விடவேண்டுமென்னும் எண்ணத்தைக் கொண்டே தமக்கையைக் காண விரும்பினார். தமக்கையைக் கண்ட விஷயத்தைப்பற்றிச் சேக்கிழாரும் இரட்டுற மொழிதல்போல் பிறவிநோயினின்று தப்பிக் கரையேறும் எண்ணங் கொண்டாரென்னும் பொருட்பட அப்பர் சூலையினின்று உய்ந்து கரையேறு நெறி கேட்டதை விளக்கியுள்ளார். அப்போது அம்மையார் பரசமயக் குழியில் விழுந்ததின் பலன் பிணியெனத் தம் பின்னோருக்குக் காட்டி அதைச் சுருதி,யுக்தி அநுபவத்தால் அவர் அப்பருக்கு விளக்கிச் சிவபெருமானைப் பணியச் செய்தார் என்னும் பொருள் பொருந்துமாறும், சிவபெருமான் அருளாலே, இவர் மீண்டு வந்தாரென்றும், அநுக்கிரகம் செய்த மொழியை அப்பர் ஏற்றாரென்றும், பின்னர் திருநீறும், ஐந்தெழுத்தும் தமக்கையிடம் பெற்றாரென்றும் பெரியபுராணம் கூறும்.

"திருவாளன் திருநீறு திலகவதியா ரளிப்பப்
பெருவாழ்வு வந்ததெனப் பெருந்தகையார் பணிந்தேற்றங்
குருவாரவணிந்து தமக் குற்றவிடந் துய்யுநெறி
தருவாராய்த் தம்முன்பு வந்தார்பின் தாம்வந்தார்"

"உற்றவிடத்து உய்யுநெறி தருவாராய்" என்னும் சொற்றொடர்களைக் கவனிக்க. அப்போது திருநீறு பெற்றதே பெருவாழ்வு வந்ததென அவர் மனதில் பட்டதென்றும் முன்னே செல்லும் குருவின் பின்னர், பின்னே செல்லும் சீடன்போல் மருணீக்கியார் பின்னே திருவதிகைக் கோயிலினுட் புகுந்தார் எனக் கூறப்பட்டிருக்கிறது. இதன்றியும் தமக்கையார் கோயிலுக்குச் செல்லும்போது திருவலகும் (Broomstick) திருமெழுக்குத் தோண்டியும் (Cowdung Waterpot) தம் கையில் எடுத்துக்கொண்டு சென்றுமென்றும் அந்நாள் தொடங்கி அப்பரும், மனம் (மானசம்), வாக்கு (வாசிகம்), காயம் (காயிகம்) என்னும் மூவகைகளால் செய்யக்கூடிய தொண்டும் செய்தனர்.

"மைபற்றுறை எறி மகிழ்ந்தலர்சிர்
வாசிசர் மனத்தோடு வாய்மையுடன்
மெய்யுற்ற திருப்பணி செய்பவராய்
விரவும் சிவசின்னம் விளக்கிடவே
எய்துற்ற *தியானமறு வுணர்வும்
ஈறின்றி யெழுந் †திருவாசகமும்
கைபற்றிக மும்உழை வாரமுடன்
‡கைத்தொண்டு கலந்து கசிந்தனரே"

என்றும் பெரிய புராணம் கூறும். இதை அப்பர் தேவாரத்திலும் காணலாம். மெய்யுற்ற திருப்பணியாகிய அலகும்மெழுக்கும் தரும் இன்பம், செய்பவராகிய என்போன்ற சகோதரிகள் அறியக்கூடியதேயன்றி, எனது சகோதரர்கள் அறியக்கூடியதன்று. ஆயினும் அப்பர் அவற்றைச் செய்தவராதலால்:—

"விளக்கினாற் பெற்றஇன்பம் மெழுக்கினாற் பதிற்றி யாகும்
துளக்கில் நன்மலர் தொடுத்தால் தூயவிண் ஏறலாகும்
விளக்கிட்டார் பேறு சொல்லின் மெய்ந்நெறி ஞானமாகும்
அளப்பில கீதஞ் சொன்னார்க் கடிகள்தாம் அருளுமாறே."

---

*மானசம். †ஸ்துதிரூபமான வாசிகம். ‡காயிகம்.

ஆகையால் அப்பர் தமக்கையார் உபதேசத்துடன் அவர் கோயில் திருப்பணிகளையும் கைப்பற்றிக்கொண்டு உழைவாரப் படையே தமக்கு வினைப்பகை அறுக்கும் பெரும்படையாகக் கைப்பற்றினர்.

இவற்றை எல்லாம் நோக்குங்கால் அப்பர் திலகவதியாரைப்பற்றி ஏன் யாதொன்றும்மொழியவில்லை? என்பதற்கு நமக்குச் சங்கை அதிகமாக எழுமன்றோ? அதற்குக் காரணம் பின் வருமாறுயிருக்கலாம் என்பது எனது உத்தேசம்; ஆயினும் அறிஞர் ஆராய்வாராக. வேளாளர் மரபில் தாயார் தமக்கை முதலிய தம்மினும் மூத்த சுற்றத்தாரை மிக்க வணக்கத்துடன் வழிபடுவது ஆண் மக்களான இளையோருக்குச் சாதாரணமாயிருப்பினும், மனுநீதி முறையில் பெண் பிள்ளைகள் எவ்வளவு பெரியோராயிருப்பினும், சுதந்தரத்துடனிருப்பதில்லை. குழந்தைப் பருவத்தில், தந்தைக்கு அடங்கியும், விவாகமான பிறகு புருடனுக்குக் கீழ்ப்பட்டும், வயது முதிர்ந்த பிறகு பிள்ளையின் பாதுகாப்பிலும் இருப்பது வழக்கம். விவாகத்தை நீக்கிய ஸ்திரிகள் தந்தை காலத்துக்குப் பின்னர் உடன் பிறந்தோனுக்கு அடங்கியவர் என்னும் கருத்துக்கேற்பப் தமக்கு நூதனமாய்ச் சிடனுய்ப் புகுந்த தம்பிக்குத் தந் திருப்பணி யாவும் தந்து திலகவதியார் தம் திருவாமூர் இல்லத்தில் மறைந்தார் போலும். அதனாலேயே திலகவதியாரைப்பற்றி அப்பர் யாதொன்றும் கூறவில்லையென்று நாம் அனுமானிக்கலாம். அவ்வம்மையாரும் மருணீக்கியார் சைவத்திற்கு மீண்டதன் பின்னர்த் திருவதிகையினின்று தமதூருக்குச் சென்றிருக்கலாம். இவ்வாறு திலகவதியாரைப்பற்றி அனுமானிக்கத்தக்க சொற்றொடர்கள் அப்பர் முதல் பதிகத்தில் சில உள.

"காத்தாள்பவர் காவல்இழந் தமையாற்
கரைநின்றவர் கண்டுகொளென்று சொலி
நீத்தாய்......"

"உயர்ந்தேன் மனைவாழ்க்கையும் ஒண்பொருளும்
ஒருவர்தலை காவலிலா மையினால்......"

இதில் "காத்தாள்பவர்" என்பதும் "ஒருவர்" என்பதும் திலகவதியாரைக் குறிக்கின்றனவா அல்லவா என்பதும் அறிஞர் ஆராயத் தக்கன.

இவையன்றியும் அப்பர் தேவாரத்தில் அப்பர் நடைக்குச் சற்று பேதமான சில பதிகங்கள் காணப்படுகின்றன. பத்தாம் செய்யுளில் இராவணனைப் பற்றியாவது பிரமன் மால் அடிமுடி காணுமை பற்றியாவது மொழியாது வேறு பலவகையான திருக்கடைக்காப்பு பெற்ற திவ்வியமான பதிகங்கள் சில உள. அவை அப்பர் பதிகங்களா திலகவதியார் பாடிய பதிகங்களா என்பதும் ஆராய்ச்சிக்கு இடந்தரும். "கூற்றாயினவாறு" என்பது முதல் பதிகமெனின் இராவணனை அடர்த்த கைலாயநாதன் பெருமை பாடாத திருக்கடைக்காப்பு உள்ள பதிகங்களில் எவை எவை அப்பர் தமதெனக் கொண்டாரென்றும் "தமிழோடிசை பாடல் மறந்தறியே"னென்னும் வாய்மையை விளக்குவன எவையெனவும் ஆராய வேண்டியதாயிருக்கிறது. அவற்றுள் "சிவனெனு மோசை", "திருவதிகை வீரட்டானம், கொப்பளித்த திருநேரிசை", "ஒன்றுவெண் பிறைக்கண்ணியோர் கோவணம்" "சித்தத்தொகைத் திருக்குறுந் தொகை" முதலியன திலகவதியார் பாடியன வாயுமிருக்கலாம். ஆகையால் திலகவதியார் சரித்திரம் அப்பர் சரித்திரத்தில் இருதய பாகமாய் பற்பல இலக்கிய ஆராய்ச்சிக்கு இடந்தருவதுடன் ஒரு குடும்பத்தில் இளையோன் அல்வழிச் சென்றால் மூத்தவள் கடமையா தென்பதை நன்கு விளக்கும்.

## முக்கிய அறிக்கை

தங்கள் சந்தாவை 31-12-1934-க்குள் மணியார்டர் செய்க. இல்லாவிடில் 10-11-1935-ல் வி. பி. வரும். வி. பி. யால் 3 அணு வீண் நஷ்டமாகும்.

# திருமூர்த்தி மலைப்புராணம்

[C. K. சுப்பிரமணிய முதலியார், பி. ஏ.]

கொங்கு நாட்டிலேயுள்ள திருமூர்த்திமலையைப்பற்றியும், அதன் புராணத்தைப்பற்றியும், அப்புராணத்தின் ஆசிரியரைப்பற்றியும் சில குறிப்புகள் வெளியிட எண்ணி இந்தக் கட்டுரை எழுதலானேன்.

இது கொங்குநாட்டிலுள்ள மலைத்தலங்களில் ஒன்று. கோயமுத்தூர் சில்லாவில் தாராபுரத்துக்கடுத்த 'தளி' என்னும் ஊருக்குச் சமீபத்தில் உள்ளது. இது திருமூர்த்திமலை மிகுந்த தீர்த்தப் பெருமையும் மூர்த்திப் பெருமையும் உடையது. தெய்வநாட்டம் அருகிவருகின்ற இந்நாளிலும் அனேக மக்கள் கூட்டங்கூட்டமாகச் சென்று இதனை வழிபட்டுப் பயனடைந்து வருகின்றனர். இம்மலை ஒரு சிறு நீர்வீழ்ச்சியினையுடைய அற்புத அருவியை யுடையது. இதிலே அநேக மருந்து மூலிகைகள் உள்ளன என்பர். ஆதலின் அந்த அருவிநீர் நோய்களை நீக்கும் குணமுடையதாகக் கருதப் பெறுகின்றது. பிரதி ஞாயிற்றுக்கிழமைகளிலும் அன்பர்கள் திரள் திரளாகச் சென்று வழிபட்டு வருவர். அதிலும் ஆவணி மாதத்து ஞாயிற்றுக்கிழமைகள் அதிக விசேடம். ஏனைய நாட்களில் அங்குச் செல்வது அருமை. இரவில் இம்மலையில் தங்கினல் கொடிய மலைச்சுரம் பற்றி இறந்துபடுவர் எனப்படுதலால் ஒருவரும் இரவில் இங்குத் தங்குவதில்லை. ஆனல் யோக சாதனையுடைய பெரியார்மட்டும் சிற்சிலர் சில காலங்களில் இம்மலையில் பலகாலம் வசித்து வருவதை நான் அறிவேன். இதிலே கட்டிடமான கோயில் ஒன்றுமில்லை. அருவியின் அருகில் ஒரு பாறையில் 3 தெய்வ உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. அவைகளையே, பிரம - விட்டுணு - உருத்திரன் என்ற திரிமூர்த்திகளது திருவுருவம் எனக் கருதி வழிபடுகின்றனர். அதனலேதான் இதற்குத் திருமூர்த்திமலை எனப் பெயரும் வந்ததாகும். ஆனல் சில ஆராய்ச்சியாளர்

இவ்வுருவங்கள் பௌத்த சமண காலத்திய உருவங்கள் என்று கூறுகின்றனர்.

இத்தலபுராணம் 25 ஆண்டுகளின்முன் தமிழில் விருத்தப்பாட்டுக்களால் இயற்றப்பெற்றதாம்; 1910-ம் ஆண்டில் அச்சிடப்பெற்றுள்ளது. இப்போது இதன் பிரதிகள் கிடைப்பது அரிது. இது, பொதுவாகத் தலபுராணங்கள் அமைந்துள்ள அமைப்பையே பின்பற்றிச் செய்யப்பெற்றதாம்; கடவுள் வணக்கம் - பாயிரம் - முதலாகப் புராணங் கேட்கும் மகிமைப்படலம் இறுதியாகப் படலம் 18-க்கு 963 விருத்தம் கொண்டது. கொங்குநாடாகிய நாட்டுச் சிறப்பும், தளி என்ற நகரச் சிறப்பும், திருமூர்த்திமலைச் சிறப்பும், தோணிநதிச் சிறப்பும் இதில் தனித்தனிப் படலங்களில் எடுத்துச் சொல்லப் பெற்றுள்ளன. திருசங்குப் படலம், அரிச்சந்திரப்படலம், நளப்படலம், முசுகுந்தன் முகம்பெற்ற படலம், இந்திரன் சாபநீங்குப் படலம், நாரதன் பூசித்தபடலம் என்ற பகுதிகளின் பெயரிற் குறித்த அந்தந்த தேவர், அரசர், மானிடர் முதலியோர் இத்தலத்தையடைந்து வழிபட்டுப் பேறுபெற்ற வரலாறுகள் பேசப் பெற்றன. இன்றைக்கும் அந்த மலையைக் கண்டு களிப்போர், அது முனிவர் தேவர் வாழ்ந்து உறைந்து பூசித்தற்குரிய இடமேயாம் என்றே எண்ணுவர். இத்திருமலையிலே உள்ள தெய்வங்கள் மிக்க வரப்பிரசாதமுள்ளன என்று இந்நாட்டினர் கருதுகின்றபடி அங்குச் செல்வோர் எண்ணிய வரங்களைப் பெற்று வாழ்ந்து வருதல் இன்றைக்கும் கண்கூடு.

(திருமூர்த்தி மலைப் புராணம்)

இப்புராண மியற்றியவர் தாராபுரம் தாலூக்கா வீமராயர் அக்கிராரம் கருப்ப பண்டிதர் குமாரர் வேலாயுத பண்டிதர் ஆவர். இவர் மிகச் சமீப காலத்திலே வாழ்ந்தவராயினும் இவரது பிறந்த நாளும் பிரிந்த நாளுங்கூடத் தெரிவிக்கக்கூடாத நிலையிலிருப்பது நமது நாட்டுச் சரிதவியல்! இவர் நாவிதர் என்று வழங்கும் மயிர்வினைஞர் மரபினர். இம்மரபினருக்

(புராண ஆசிரியர்)

குப் பண்டிதர் என்ற மரபுப் பட்டப்பெயரும் வழங்குகிறது. இம்மரபினர் பலர் மருத்துவ நூற்பயிற்சியைத் தமது குலத் தொழிலாகக் கொண்டனர். இவரும் அவ்வாறே வைத்தியத்தொழில் செய்துவந்தனர்.

இப்புராணம் இயற்றுதற்குமுன் சைவபுராணம் என்றொரு பெருநூல் தமிழ் விருத்தப்பாட்டில் இயற்றியுள்ளார். அது 78 அத்தியாயங்களையும், 1857 பாட்டுக்களையும் கொண்டது. அதுவும் அச்சிடப் பெற்றுள்ளதேனும், இப்போது பிரதிகள் கிடைப்பது அருமை. இவர் கல்வி கேள்விகளிலும் சைவ ஒழுக்கத்திலும் சிறந்து விளங்கினர் என்பது இவரது நூல்களிலிருந்து நன்கு புலனுவதன்றி இவரை நேரில் அறிந்த நானும் பிற நண்பர்களும் உணர்வோம். சாந்தசீலமும், இன்சொல்லும்,கண்டோர் மனங்கவரும் நன்னடையின் காட்சியும் உடையராயிருந்தனர். சிவ பத்தியிற் சிறந்தவர் என்பது இவர் ஒரு சுப்பிரமணியசுவாமி கோயில் தாபித்தனர் என்ற செய்தியாலும், இவரது நூல்களில் சொல்லியிருக்கும் தோத்திரங்களானும் நன்கு விளங்கும். சைவ புராணத்திலே சிவபூசாவிதி யுரைத்தது நித்யகருமம் உரைத்தது, உருத்திராட்ச மகிமை - ஆதி சைவர் சிறப்பு-கண்ணன் சிவபூஜை-சிவராத்திரி மகிமை - ஞானப்பிரகரணமாதி அத்தியாயங்களிற் கூறிய பொருள்களாலே இவரது சைவ ஒழுக்க உணர்ச்சி வெளியாகும். இவரது செய்யுள் நடை செம்பாகமானது ; படிப்போர்க்கு எளிதில் விளங்குவதாம். இந்நூல்களினுலே இவர் இலக்கிய நூற்பயிற்சி மிகவுமுடையார் என்பது தேற்றம். இம்மரபினரில் தமிழ் நாட்டிலே கவிவாணர்களாகவும், சைவ சீலமுடையவர்களாகவும் உள்ளார் மிகச் சிலரேயாதலின், இக்கொங்கு நாட்டில் இத்தகைய ஒருவர் சமீப காலத்தில் விளங்கினர் என்பது கொண்டாடத் தக்கதாம். இத்தகைய புலவரை ஆதரித்த கொடையாளர்களும் இந்நாட்டில் உண்டென்பது இந்நூல்களால் விளங்குகின்றது. ஜெல்லியம்பட்டி நாராயணசாமி நாயுடு, சுப்பைய நாயுடு, சின்னக் குருசாமி நாயுடு என்று இந்நூலாசிரியர் பாடிய நன்றி யறிதற் பாட்டுகளாலே விளங்குகின்றது. இவர்களிலே

சின்னக் குருசாமி நாயுடு என்பவர் தாமும் தமிழ் கவிவாண ராவர். இந்நூலுக்குச் சாற்றுக் கவியும் கொடுத்துள்ளார். இவர் தமது சைவ புராணத்தைக் கங்கை குலத்தாரும் சைவ மரபினருமான மானமாநகர் (மானுப்பட்டி) பெருமாள்முதலி யாரின் வேண்டுகோளின்படி இயற்றியதாக அவை யடக்கச் செய்யுளில் பாடிப் பாராட்டியுள்ளார்.

இந்த இரண்டு புராணங்களிலும் கூறியிருக்கும் குரு வணக்கச் செய்யுளால் ஒரு நல்லய்யர் என்ற பெரியாரிடத் திலே கல்வி பயின்றவ ரென்றும் அப்பெரியாரே இவரை நல் வழியிற் செலுத்திய பெரியாரென்றும் தெரிகிறது.

> "அறிவிலானென வகற்றிடா தருகினி லிருத்தி
> மறவில் நூலெலா மருளிதெரிதர வகுத்தச்
> சிறியனேன்றனை நல்வழியிற் செலச் செலுத்திப்
> பிறிதிலாத நல்லயதரு வடிகள் பேணுவாம்"

என்பது திருமூர்த்திமலைப் புராணம் பாயிரம் குருதுதி.

"நல்லய குருவடி நாளும் பேற்றுவாம்" என்பது சைவ புராணத்துக் குருதுதி யாகும். இந்த நல்லயரின் வரலாறு ஒன்றும் தெரியவில்லை.

தமது சிறுபிராயத்திலே உயிர்க்கேடு வரக்கூடிய ஒரு பெரிய ஆபத்தினின்றும் திருமூர்த்திமலைத் தெய்வ அருளி னால் தப்பி வாழ்ந்தமையை நன்றி பாராட்டி வருடந்தோறும் அங்குச் சென்று சிறப்பும் பூசையும் நடத்திவரும் கோவை மாநகர் உயர் சைவத் திருவாளர் B. வேங்கடாசல முதலி யார் அவர்கள், B.A., B.L. இப்புராணத்தின் பிரதி யொன்று தந்துதவி இதைப் பற்றிச் சுருக்கமாகவேனும் ஒரு கட்டுரை எழுதுமாறு ஆணையிட்டபடி எழுதினேன்.

---

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

சைவ சித்தாந்த மகா சமாஜத்தின்

## இருபத்தொன்பதாம் ஆண்டு நிறைவிழா

# சைவர் மகாநாடு, திருவதிகை

உரைசெய் நூல்வழி ஒண்மலர் எட்டிடத்
திரைகள் போல்வரு வல்வினை தீர்ப்பரால்
வரைகள் வந்திழி யுங்கெடி லக்கரை
விரைகள் சூழ்ந்தழ காயவீ ரட்டரே.—அப்பர்

பேரன்புடையீர்,

சைவசித்தாந்த மகாசமாஜத்தின் இருபத்தொன்பதாம் ஆண்டு நிறைவிழாவும் சைவர் மகாநாடும் திருவதிகைவீரட்டானத்தில், "நவசக்தி" ஆசிரியர் - திருவாளர் - திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்கள் தலைமையில், நிகழும் பவஞு மார்கழிமீ அஉக்குச் சரியான 1934ஞூ டிசம்பர்மீ 23உ ஞாயிற்றுக்கிழமை முதல் மூன்று நாட்கள் அடியிற் காணும் முறைப்படி நடைபெறும். இவ்விழாவின் சார்பான சைவ மங்கையர் மகாநாடு, சென்னைப் பல்கலைக்கழகத்தில் வித்வான் பட்டம் பெற்றவரும், அக்கழகத் தமிழாராய்ச்சிப் பகுதியில் ஆராய்ச்சிப்பணி புரிபவருமாகிய திருநிறைசெல்வி - தாணு அம்மாள் அவர்கள் தலைமையிலும், சைவஇளைஞர் மகாநாடு, சென்னை ஆவணப் பதிவுக்கூட்டுத் தலைவர் திருவாளர் - கீ. இராமலிங்க முதலியார், பி. ஏ., அவர்கள் (Joint Subregistrar, Madras) தலைமையிலும் நடைபெறும். இவ்விழாவையும் மகாநாடுகளையும் 'திண்ணமாகத் திறந்தருள் செய்து' உடனிருந்து நடத்திவைக்கத் திருக்கோவலூராதீனம் - திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீமத் ஞானியார் மடாலயத்தலைவர் ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் அன்பு கூர்ந்து இசைந்துள்ளார்கள். தாங்கள் தங்கள் சபையினரோடும், வாழ்க்கைத்துணை மக்கள்முதலிய உறவினரோடும், ஏனைய அன்பர்களோடும் வந்திருந்து நிறைவிழா முதலியவற்றைச் சிறப்பாக நடத்திவைக்கும்படி வேண்டுகிறோம்.

இங்ஙனம்: தங்கள் அன்புள்ள,

ச. சச்சிதாநந்தன்,

அ. சோமசுந்தரன்,

சமாஜ உதவித்தலைவர்கள்.

ம. பாலசுப்பிரமணியன்,
சமாஜப் பொதுக்காரியதரிசி.

தி. து. கி. நாராயணசாமி,
வரவேற்புக்கழகக்காரியதரிசி.

# நிகழ்ச்சி முறை

பவ ௵ மார்கழி ௴ ௮௳ (23-12-1934) ஞாயிற்றுக்கிழமை

| | | |
|---|---|---|
| காலை 9 | —11 | திருவதிகை வீரட்டானத்தில் திருக்கோயில் வழிபாடு, சமாஜத்தின் அடக்கவிலைச் சுத்தப் பதிப்பாக சித்தாந்த சாத்திரம் பதினான்கின் மூலமும் உரையும் வெளியிடல். |
| மாலை 2 | — 2·30 | கடவுள் வணக்கம், தலைவர் வரவேற்பு, திறப்பு விண்ணப்பம். |
| 2·30 | — 3·30 | திறப்புப்பேருரை, திறப்பு. |
| 3·30 | — 3·45 | ஆண்டு அறிக்கை படித்தல். |
| 3·45 | — 4·45 | தலைவர் பேருரை. |
| 4·45 | — 5·15 | திரு. கி. குப்புச்சாமி முதலியார், திருக்குறள் விளக்க ஆசிரியர், சென்னை 'திருவெம்பாவை' |
| 5·15 | — 5·45 | திரு. ந. சிவகுருநாத பிள்ளை, தூத்துக்குடி 'பொய்கண்டார் காணாப்புனிதமெனும் அத்துவிதம்' |
| 5·45 | — 6·15 | திரு. C.M. இராமச்சந்திர செட்டியார், பி. ஏ., பி. எல்., கோயம்புத்தூர் 'சொல்லுக்குறுதி' |
| 6·15 | — 6·45 | திரு. R. P. சேதுப்பிள்ளை, பி. ஏ., பி. எல்., அண்ணாமலைநகர் 'சைவ வேந்தர்' |
| 6·45 | — 8 | தலைவர் கருத்துரை, கடவுள் வாழ்த்து. |



பவ௵ மார்கழிமீ கூஉ (24-12-1934) திங்கட்கிழமை

காலை 7 — 9 சமாஜக்காரியக் கூட்டம், தீர்மானங்கள், உத்தியோகஸ்தர்கள் தேர்தல்.

9 —11-30 சைவஇளைஞர் மகாநாடு.

பகல் 1 — 3 சைவமங்கையர் மகாநாடு.

மாலை 3-30— 4 கடவுள் வணக்கம், தலைவர் முன்னுரை.

4 — 4-30 திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை, எம். ஏ., எம். எல்., திருநெல்வேலி
'அப்பர் தேவாரச் சிறப்பு'

4-30— 5 திரு. ஈ. ந. தணிகாசல முதலியார், பி. ஏ., பி. எல்., சென்னை 'சம்பந்தரும் கம்பரும்'

5 — 5-30 திரு. வித்வான். தெ. பொ. மீனாட்சிசுந்தரம் பிள்ளை, எம். ஏ., பி. எல்., சென்னை
'பொன்வண்ணத்தந்தாதி'

5-30— 6 திரு. தானு அம்மாள், சென்னை 'திலகவதியார்'

6 — 6-30 திரு. கி. இராமலிங்க முதலியார், பி. ஏ.,
'பட்டினத்தார்'

6-30— 7 திரு. பண்டிதமணி - மு. கதிரேசச் செட்டியார் அண்ணாமலை நகர் 'சைவத்தின் தனிச்சிறப்பு'

7 — 8 தலைவர் கருத்துரை, கடவுள் வாழ்த்து.

---

பவ௵ மார்கழிமீ யஉ (25-12-1934) செவ்வாய்க்கிழமை

காலை 8 — 8-30 கடவுள் வணக்கம், தலைவர் முன்னுரை.

8 30— 9 திரு. அ. ச. சம்பந்த முதலியார், லால்குடி
'மெய்ப்பொருள் நாயனார்'

9 — 9-30 திரு. வித்வான்-மறை - திருநாவுக்கரசு, அண்ணாமலை நகர் 'திருத்தாண்டகம்'

9-30—10 திரு. அ. சிதம்பரநாத செட்டியார், பி. ஏ., எல்.டி., அண்ணாமலைநகர் 'பெரியார் இருவர்'

10 —10-30 திரு. வித்வான்-பெரியசாமிப் பிள்ளை, விருத்தாசலம் ‘திருநாவுக்கரசர்’

10-30—11 திரு. புரிசை. முருகேச முதலியார், திருவண்ணாமலை ‘புனிதவதியார் திருமணம்’

11 —11-30 திரு. T. S. கந்தசாமி முதலியார், பி.எ., சாத்தூர் ‘திருவள்ளுவர் அறநெறியின் அடிப்படை’

11-30—12 தலைவர் கருத்துரை - கடவுள் வாழ்த்து.

---

மாலை 3 — 3-30 கடவுள் வணக்கம், தலைவர் முன்னுரை.

3-30— 4 திரு. அ. மு. சரவண முதலியார், தமிழ்ப்புலவர் அரியலூர் ‘சொற்செல்வம்’

4 — 4-30 திரு. ஈ. த. இராஜேசுவரியம்மாள், எம். எ., எல். டி., சென்னை ‘கோளறுபதிகம்’

4-30— 5 திரு. ந. மு. வேங்கடசாமி நாட்டார், அண்ணாமலைநகர் ‘தவநெறி’

5 — 5-30 திரு. பு. சமரபுரி முதலியார், சென்னை ‘சங்கரனே சண்முகன்’

5-30— 6 திரு. ச. சச்சிதாநந்தம் பிள்ளை, பி.எ., எல்.டி., சென்னை ‘கந்தரனுபூதி’

6 — 6-15 வந்தனை கூறல்.

6-15— 7-15 தலைவர் முடிபுரை.

7-15— 8-15 ஸ்ரீலஸ்ரீ ஞானியார்சுவாமிகள் ஆசிர்வாதவுரை.

8-15— 8-30 கடவுள் வாழ்த்து.

‘கோதில் சைவக்குலமிக வாழியே’

---

குறிப்புகள்:—பெண்மக்களுக்கு அவைக்களத்தில் தனியிடமுண்டு. சொற்பொழிவுகட்கிடையிடையே தமிழ்மறை ஓதப்பெறும். இரண்டாம் நாள் காலை 7-மணிமுதல் 9-மணிவரை நடைபெறும் காரியக்கூட்டத்திற்கு வாக்குரிமையுள்ளவர்கள் மட்டும் வரலாம். மூன்று நாட்களிலும் சமாஜ வெளியீடுகளாகிய அடக்கவிலைப் பதிப்புகள் விலைக்குக் கிடைக்கும். விழுப்புரத்திலிருந்து 10 மைல் தூரத்தில் சிதம்பரம் போகும் இருப்புப்பாதையிலுள்ள பண்ருட்டி ரயில்வேஸ்டேஷனிலிறங்கி 1½ மைல் தூரம் குதிரை வண்டியில் சென்றால் திருவதிகை வீரட்டானத்தை யடையலாம்.